


# ஊகரு பிடாரி

இதழ் 22

60 பைசா

வேதாளனும் பில்லிசூனியமும்

# ஊகூடூ பிடாரி

நடுக்காட்டில் நவீன மருத்துவ உதவி கிட்ட வகை செய்துள்ளான் வேதாளன்- ஆதரவான அவனுடைய பாதுகாப்பில் பணிபுரிபவர் டாக்டர் அக்ஸல்; எனி- -னும் பில்லி சூனியக்காரர்களால் ஓயாத ஆபத்து என்றும் ஏற்படுகிறது அவருக்கு!

பாழும் டாக்டர் மருந்துனுலே நம்ப பரம்பரைக் கலையைக் கேலி பண்றுங்கய்யா இளவட்டப் பயலுக.

அக்ஸலையும் அவன் ஆசு- -பத்திரியையும் ஒழிக்கணும்.

இவனைக் காப்பாத்தறுனே வேதாளன் அவன்தான் சிரஞ்சீவியா என்ன? எங்களுக்கா தெரியாது!

சரி, இதை ஜனங்க கிட்ட சொன்னுக்கே நம்பனுமே அவங்க.

அதுக்கு இருக்கு வழி...

ஆளைக் கொல்லு!


ல் ஆஸ்பத்திரி
வேதாளன் செத்தா டாக்டர் அக்ஸலும் ஒழிஞ்சு போவான்.
நம்ம மருந்து ஜெயிக்கப் போவுது.
வேதாளனின் பாதுகாப்பில் உள்ள டாக்டர் அக்ஸலின் ஆஸ்பத்திரிக்குப் பகையாக எழுகிறது ஒரு பயங்கரம்!


கொலைச் சின்னமாம் ஊகூரூ என்ற புதைந்த சிலையை மீட்டுக் கொடும்-பாவி நடுகின்றனர் பில்லிசூனியக்காரர்கள்.
ஜனங்களை மறுபடி பயமுறுத்தி வையப்பனே!
ஊகூரூ


பழைய பயங்கரம் ஒன்று மீண்டும் முளைக்கிறது...
அடங்காத எவனையும் அழிப்பார் ஊகூரூ!
ஊகூரூ... ஒரு புரட்டு!


ஹே ஊகூரூ! திமிர் புடிச்ச கிழவன் மகனைக் கொல்லு! காலிலே ஈட்டிகுத்தினுப்புலே வலிச்சு உயிர்விடனும்!


மிரண்டுபோய் வீடு-திரும்புகிறன் கிழவன்.
கொல்லும்படி என்மீது ஏவினுன் ஊகூரூவை...
புரட்டன்கிட்டப் போகாதீங்க... வேஷதாரி!


திடீரென்று...
அப்பா!
என் காலு...
ஹா... காலு...!


எச்சரிக்கை எழுகிறது உடனே...
ராஸ்கல், என்னடா செய்தே எங்கப்பனை, டேய்
ஊ கூருவை மீறின பாபி ஒழியறான்... கும்பிடாத எவனுக்கும் இதே கதி வரும்!


நீ போடற புகையால்தான் வருது. டாக்டர் அக்ஸலைக் கேட்டா தெரியும்...
ஊ கூரூ. நிறுத்திக் கொல்லு இவனை!


... ஆ! தலை... சுத்துதே ..அசதி...
ஊ கூரூ சாபம்டா... மவனே...


இனமறியாத அப் பழைய பயங்கரம் மறுபடி ஆதிவாசிகளை எதிர்கொண்டது ஊ கூரூ வடிவிலே.
ஊ கூரூவையோ, என்னையோ எதிர்க்கறவன் எவன்...?


காடெங்குமே பில்லி சூனியக்-
-காரர்களின் சடங்குகள் பரவி,
நாடோடித் தலைவர்களையும் கூட
நடுநடுங்க வைக்கிறது....


சூனியக்காரர்களை எதிர்த்த
இளம் வீரர்களும் இல்லாமலில்லை.


அக்ஸல் ஆஸ்
அச்சமே
ஓங்கியது.
எதற்காகப்
போறீங்க?
டாக்டரய்யா. சூனியக்
காரங்க... ஊ கூடூ...
தங்கினு சாவுதான்!


நம்மைக் காக்க
வேதாளர் இருக்கப்
பயமேன்? இதோ
வேதாள முத்திரை!
க்ஸல் ஆஸ்ட


வேதாளன் செத்தா
சரி, டாக்டரையோ
இவங்களையோ
காப்பாத்த
ஆள் இராது...


சூனியக் கும்பலின் திட்டத்தை நன்கறிவான் வேதாளன்.
இன்று அமாவாசை. சூனியக்--காரர்கள் மலையுச்சி மீது குழுமி என் தலை விதியைத் தீர்மானிக்கப் போகிறார்கள்!


அவர்களின் இரகசியக் கூட்டத்தில் கலந்து கொள்கிறான்.
திரும்புது குல சக்தி! வேதாளனை அடியோட ஒழிச்சுக் கட்டற நேரம் வந்தாச்சு!


ஊகூரு சக்தியை எதிர்த்து நிற்கச் சொல்லி சவால் விடுவோம். ஓடிட முடியுமா! எல்லாரையும் போல பயல் செத்துமடியறதைக் காடு பார்க்கத்தான் போவுது!


மாயத் தீ எழுப்பத் தரை மேலே எண்ணெய் தெளி!
... அதோட வேதாள மாயாவியும் பஸ்மம்!


சேரிக்குத் திரும்பி இந்த சேதியைச் சொல்லுங்க: வேதாளப் பயலை அழைக்கறாரு ஊகூரு சாமி!
இரு. ஊகூரு... உனக்கும் எனக்கும் அதி விரைவிலேயே மோதல்!


சூனியக் கும்பலின் பறை ஒலி பரவுகிறது அக் காடு முழுதும்.
ஊ கூடூ சாமியை எதிர்க்கத் துணிவானா வேதாளன்?


அதிகார பூர்வமான சவால் எழுந்தது.
சதிதான். சூரன். ஆயினும் துணிந்து தீமை அகற்ற வேண்டியது என் கடமை.
உங்களைக் கொல்லவோ என்னவோ சூழ்ச்சி...


மிருக எலும்புகளால் இந்தப் பையை நிரப்பு, இரகசியமாக, யாருமறியாமல்!


இரவு நெருங்கிய வேளை, வேதாளன் சவாலை ஏற்கப் புறப்படுகிறான்.
புதிர்தான். எலும்புங்க என்னமாத்தான் ஒதவுமோ?


குலத்தலைவர்கள் காத்துள்ளனர் மலையுச்சியிலே.
வேதாளனாவது வரவாவது. நம்ப பிடாரிகிட்ட பயம் அவனுக்கு.


தீர்ந்ததப்பா வேதாள சக்தி!
ஓ... அப்படியா சேதி!
வேதா-ளன்!
வந்துட்-டானே!


உன்னாலானதைப் பார், ஊகூடூ... காடறிய உரைப்பேன். நீ ஒரு போலி... பில்லிசூனியக் கும்பலும் ஒரு புரட்டு!
இந்தப் பாவியை படுநாசமாக்கு... ஹேற ஊகூடூ...!


ஒரு யுக்திப்படி உடனே தீயை உமிழ்-கிறது சிலை. எண்ணெய் தெளித்த தரையோ பற்றி எரிகிறது! நெருப்பு!


பரவும் எரிதழல் பாறையோரம் வரை அவர்களை விரட்டி, 100 அடி ஆழம் வீழ்த்துகிறது!


வேதாளன் சாகிறதைப் பார்! ஊகூடூ சக்தி!


பரவிய புகையில் எலும்பு முட்டையைப் போட்டுவிட்டுப் பாதாளத்தில் பாய்கிறான் வேதாளன்.


புகை விலகு முன்பே ஏரியில் முழ்கி மாயமாக மறைந்தனர்.


பிற்பாடு, தீ தணிந்ததும்...
மாண்டான்... நாய் குதிரை எல்லாம்!
கொன்றது ஊகூரு!
வேதாளப் பயலோட எலும்புங்க இதோ!


ஊகூருவை மீறினவன் எவனும் சாவான்!


இனத் தலைவர்கள் மலைமீதிருந்து கலைந்த-
-தும் காடெங்குமே பரவுகிறது செய்தி:
ஊகூருவுக்கு வேதாளன் பலி!
வேதாளன் செத்தான்


கிளம்புங்க. பழிக்குப் பழி. வேதாளன் மடியக் காரணமான அவ்வளவு பேரையும் அழிப்போம்.
காட்டுத் தீயெனப் பரவி, கொடிய விஷ சாதிக் குள்ளர்களின் காதிலும் விழுந்துவிட்டது செய்தி.


பந்தர் மக்களே. நீங்கள் பாதிக் காடு தாண்டுமுன் நானே வந்துவிட்டேனே!
இருக்கார் உயிரோட


ஆனா எலும்பு கெடச்சு-தாமே... பாத்தாங்களாமே தலைவருக
குரான். மிருக எலும்புகளை நீ திரட்டினாயே அதுதான். நான் மாண்டதாகவே நினைக்கட்டும் அவர்கள்.


ரகசியத்தை ஒப்படைத்த பின், வேதாளன் காட்டு வழியே விரைந்து, வனக்காவல் நிலையத்தை ஒட்டிய, தன்னந் தனியான பாழும் கிணறு ஒன்றை அடைகிறான்.
விஷக் கிணறு விலகிப் போ.


கிணற்றில் இறங்கி, காவல் நிலையத்தை எட்டும் மர்மக் குகை வழியே நடந்து செல்கிறான்.


கட்டளைகள் காலையிலே கர்னலுக்குக் கிட்டும். ஆனால் தாக்குப்போக்கே புரியப் போவதில்லை அவருக்கு.


மறுநாட் காலை, தள--பதி அறைக்கதவின் மீது சிவப்புநிற விளக்கொளி!
சைகை விளக்கு! தளபதியிடமிருந்து ஏதோ செய்தி.
தளபதி வனக் காவல்


தளபதியின் காலி அறையில் மற்றொரு செய்தி வந்தடைகிறது கர்னலுக்காக.
"கறுப்புச் சாயம் பூசிய ஹெலிகாப்டர், வலை, எஃகுக் கம்பிகள்..." எதற்காகக் கேட்கிறார் இதெல்லாம்?


கறுப்பு ஹெலிகாப்டர்... 500 அடி நீளக் கம்பி... வலை... எல்லாம் தயார்!
கட்டளை எவ்வளவு விபரீதமாக இருப்பினும் ஈடேற்ற வேண்டும் என்பதை அறிவார் கர்னல்.


வேதாளன் மாண்ட செய்தி பரவிய பலன் அக்ஸலின் ஆஸ்பத்திரிக்குப் பேராபத்து!
எல்லாரும் இன்றிரவு டாக்டர் அக்ஸலோட ஆசுபத்திரியை நாசம் பண்ணப் புறப்படணும்.. ...ஊ கூரு சாமி ஆணை!


வருவதை ஏற்கத் தயாரானார் டாக்டர்...
வராங்க டாக்டரய்யா. அதோ பறைக் கொட்டு...
உள்ளே போய்ப் பதுங்கியபடி பாதுகாத்துக் கொள்வதே சரி.


வேதாளனே அப் படையினைத் திடுக்கிட வைக்கிறான்.
ஈடேற்றி விட்டனர் ஆணையை. பலே!

வேதாளனின் போர்முறைக்குப் பேருதவி புரிய எழுகிறது ஒரு நவீன ஹெலிகாப்டர்.
கண்ணிலே எதுவுமே படவில்லை... ஆ... அதோ வேட்டுச் சைகை! ஓட்டுவோம்.




உச்சி விளக்கைப் போட்டதும் ஒரு மாயக் காட்சியே உருவாகியது!
எங்கே சூனியக் கும்பல்...?


சிறகடித்துப் பறந்தது பாரீர் ஒரு புரவி!
பயலே, மெல்ல


மர உச்சிகளுக்கு மேல் வேதாளன் குதிரை மீது இடி முழக்கத்துடன் பறந்து சென்றது ஓர் விந்தைக் காட்சி.
வேதாளர்!
கலியுக மகா மாயாவி


மலையுச்சி மீது தயங்கு சற்றே! வேட்டுச் சைகை கேட்டதும் ஓட்டு... இதோ சிகரம்!


கிடைத்துவிட்டது ஊசுரு... இனி டாக்டரையும் சூனியக் கும்பலை-யும் நோக்கி...


இதற்கிடை, போர் துவங்கிவிட்டது...
சுட்டெரி டாக்டர் அக்ஸலை!


அதையே திருப்பித் தருகிறேன்!


திடீரென நின்றது போர்...
வேதாளன்!
பூலோக மகா மாயாவி!
அட. உயிர்--பொழச்சு வர்ரா ரே!


ஊகூடு! நீ தரை சேரு!


ஊகூடு
உடைச்சவன் வேதாளன்!
அந்த சாகாத ஆத்மா!


கொலைக் கடவுளின் உடைந்த சிலை... மாண்ட மன்னன் மீண்ட லீலை... அனைத்தையும் கண்டு மலைத்தனர்.


ஓடறுங்க, அட அப்பாலே ஓடறுங்க!
இப்போது நாமென்ன செய்வது டாக்டர்?
எரிகிற நம் கூரையை அணை!




திடீரென உச்சி விளக்கை அணைத்தான், இருள் வானில் மாயமானான் வேதாளன்.

மாயம்!










காட்டு மக்கள் சீறியெழ, ஓட்டமெடுத்தனர் அப் பில்லி சூனியக்காரர்கள்.


தண்டனை நிச்சயமாகவில்லை. கொடி-யதாக ஒன்றிருக்குமானால் அதுவே...
நடக்கும்!


கடமை முடிந்ததும் வேதாளன் நடுக்காட்டுக்கே திரும்பினான்.
ஒழிந்தே போச்சு ஹூடூ சூனியம்!
கேள்விப்பட்டோம்.


ஆகாசத்துலே பறந்தீங்களே, சொல்லுங்க அதென்னமா?
சொல்லாமல் ஊகிப்பதே நல்லது, குரன்.


மறைந்தது ஹூடூ... பறக்கும் வான் குதிரைமீது பவனிவந்த வேதாளன் கதையோ மறையவே மறையாது!

# ஆந்தைவிழிக் கள்ளர்கள்

வெப்ப மண்டலக் கடலைக்
கடக்கிறது 'ஆரியன்'
கப்பல். தளமெங்கும்
களிப்பு, கோலாகலம்.
எனினும் அம் மகிழ்ச்சி
நீடிக்க முடியவில்லை...

அன்றிரவே ஆந்தை விழிக் கள்ளர்கள்
தாக்குகின்றனர், 1500 பிரயாணிகள்
அயர்ந்து உறங்கும் நடுநிசியிலே...

இதற்குப் பெயர் கொள்ளை. தப்புவது சாத்தியமேயல்ல.

கப்பலறைகளில் கள்ளர்கள் விரைந்து
ஊடுருவினர் கமுக்கமாக.

இங்கே வர என்ன துணிச்சல்?

மூச்சு விடக் கூடாது!

கப்பலதிகாரிகளும் தப்பவில்லை; ஈசல்
போல மொய்த்தது கொள்ளைக் கும்பல்.

பற. விடிய விடியக் குடைய நேரமில்லை.

தொடங்கிய வேகத்திலேயே முடிந்தது.
பிரயாணிகள், அதிகாரிகள் யாவரும்
அவரவர் அறைகளுள் பூட்டப்பபட்டனர்.

ஓசைப்படாமல் கம்பிநீட்டி விட்டார்கள், நம்மை உள்ளே பூட்டிவிட்டு!


மேல் தளத்திலே, களவுப் பொருள்களை ஹெலிகாப்டரில் ஏற்றுகின்றனர் அக் கள்ளர்கள் பரபரப்புடன்...


ஹெலிகாப்டர் அகன்றதும் கள்ளர்கள் கப்பலெங்குமுள்ள பிரயாணிகளின் அறைகளில் மாயமாக மறைந்தனர்.


சீக்கிரம் வீசியெறி வேஷத்தை. விட்டெறி ஜன்னல் மூலமாக.
1500 பிரயாணிகள்; எங்கே, கண்டு பிடிக்க -ட்டுமே!


கண்டுபிடிப்பதோ எளிதல்ல. காரணம், கயல்விழிக் கன்னியரும் இருந்தனர் ஆந்தை விழிக் கள்ளர்களிலே!
வந்துவிடு- -வார்கள். சீக்கிரம்! நாமும் கொள்ளை கொடுத்தவர் போல நடிப்போம்.


இதற்குள் அதிகாரிகள் விடுவித்துக் கொள்கின்றனர்.
கேப்டன் ஸார். எவரையுமே காணோமே.
சாவிகளை எடு. பிரயாணிகள் உள்ளே பூட்டப் பட்டிருக்கிறார்கள்.


விடுபட்ட ஒவ்வொருவர் வாயிலிருந்தும் அதே கதை!
பூதப் பேர்வழிகள் பறித்துக் கொண்டனர். எல்லாம் போச்சு!
805


மறுநாட் காலை, விசாரணை துவங்கியது...
கப்பல் முழுதும் துருவித் தேடிவிட்டோம் உடை, துப்பாக்கி எதுவுமே அகப்பட - -வில்லை.
கடலில் எறிந்திருக்கக் கூடும். அல்லது ஹெலிகாப்டரில் ஏற்றியனுப்பி- இருக்க- -லாம்.
கள்ளர்கள் கப்பலை விட்டுப் போகவில்லை!


டிரான்ஸ்மிட்டர் தாக்கப்பட்டது கேப்டன், ஆனால் சரிப் படுத்தி- -விட்டேன் நான்.
சரி. அடுத்த துறைமுகத் திலிருக்கும் போலீசுக்குத் தகவல்கொடு உடனே.


இச் செய்தி உலகெலாம் ஒலிபரப்பப்- -பட்டு, கபால குகையிலுள்ள வேதாள மாயாத்மாவுக்கும் எட்டுகின்றது
கப்பல் கரை சேர்ந்து கள்ளர்கள் கலையு- முன்பே நகர்சேர வேண்டும் நான்.


கப்பலோ கரைசேர்ந்தாகிவிட்டது. கள்ளர்கள் கொண்டாடுகின்றனர்.
எல்லா ஏற்பாடும் கச்சிதம். நடக்கட்டும் இதோ ஜோரில்!
வீடு சேருங்க. அழைப்போம். அதுவரை... பேசக் கூடாது!

சில சமயம் வேதாளன் காட்டைவிட்டு யாவரையும் போல் உடையணிந்து நகரில் உலவுவது வழக்கமாம்.

அப்படி ஒரு சந்தர்ப்பம் இன்றிரவு.













யோவ். அந்தக் கப்பல் சமாச்சாரம் பத்தி இன்னு கண்டே?
ரொம்பத் தெரிஞ்ச மாதிரி அளந்துக் கிட்டே போறுரு தொரை!
உங்க கும்பலிலே சேரத்தக்க அளவுக்குத் தெரியும். சம்மதமா?


சவடால் அடிக்காதே தம்பி.... .... ஆ!
வாலி, தாவு!


டே...டே எதாலே அடிச் - சான் நம்மை?
கையிலே கடப்பாறை இருந்த மாதிரி...


எதுவும் தெரியாம - தான் வரான் நம்மோட சேர.
கொஞ்சம் அசந்து போனோம்.
துப்பாக்கி புடிச்ச உ பேரைப்புரட்டி அடிச்சவன்! டேயப்பா. சேரட்டுமே நம்ப கூட!


எவனோ ஒரு தடிப் பயல் வளையவந்து... அட, உன் தாடையிலே என்னப்பா? ஏதோ கபாலக் குறி!


கபாலக் குறி? முன்பு பார்த்த நினைவு.... சரி, நேரமாகி விட்டது, ஆட்களைக் கூட்டு!


ஆந்தை விழிக் கள்ளர்களின் பேரவை கூடியது வேகமாக.


ஒளிந்து கொண்டே எத்தனை நாள் வாழ்வு?
போன தடவை நடத்தினதுக்கு பணம் வரலியே!
இருங்க. உங்க பணம் ஓடிடாது. கடைசீயாக இன்னொரு வேலை முடியட்டுமே.


அப்படியொன்றும் இரகசியமாக நடந்துவிடவில்லை இக் கூட்டம்.
நாளைக்குப் புறப்படுது 'மார்லார்'! தட்டினோம்னு ஆளுக்கு 300 தேறும்!


கொள்ளைக் கும்பலை ஏற்றிக்கொண்டு கிளம்பிய 'மார்லார்' கப்பலிலே ஒரு மர்மப் பிரயாணி... ஏனோ நள்ளிரவில் கப்பல் கேப்டனைக் காணலானான்...
யாரய்யா நீ? இங்கே எப்படி....?
நினைவிருக்கிறதா கேப்டன், 'ஆரியன்' கப்பலைக் கொள்ளை யடித்ததே ஒரு கும்பல்..
அவர்கள் இங்கே..!


என்ன அத்தாட்சி அதற்கு?
கேபின்களில் அகப்படும் ஆயுதங்களும் மாறுவேடமும்! கொள்ளையர் தலைவன் 37ம் அறையிலிருக்கிறான்.


உடனே சோதனை துவங்குகிறது கப்பல் அதிகாரிகளால்...
இது என்ன கூத்து?
ஆயுத சோதனை. கதவு திற!
37


ஆனால் ஏதும் அகப்படவில்லை.
எந்த நாளும் சட்டத்தை மீறுகிறவங்க நாங்க இல்லை!
பரம சாது நாங்க!


இச்சோதனையால் கள்ளர்களிடை சந்தேகம் எழலாயிற்று...
என்கிட்ட துப்பாக்கி இருக்கறதாக எவன் சொன்னான் கேப்டனிடம்.
13ம் அறைப் பேர்வழி.... ஒரு பயங் கொள்ளி!


கள்ளர்கள் வேதாளனை அணுகினர்.
யார்ரா இவன்... மூளைகெட்ட முட்டாப் பய இங்கே.....?
14


ஆட்கள் புகுந்தவுடனே வேதாளன் கதவை நோக்கிப் பாய்கிறான்....


திடீரென தலைமீது மோதிய ஒரு துப்பாக்கி தடுத்துநிறுத்துகிறது...


அட தோ கபாலக் குறி! தாடையில் விழுந்ததே குறி அதே மாதிரி!


யாருய்யா நீ. இன்னாது உன் கோல்மால்?


மறு பேச்சுப் பேசாமல் எழுந்து வெளியேறுகிறான் வேதாளன்.
சுடாதீங்க. வம்பு. கப்பல் பூரா நம்ப மேலே பாயும். பய பின்னாடியே போ....


தயங்காமல் வேதாளன் கப்பலின் விளிம்பிற்குப் பளிச்செனப் பாய்ந்து அப்பால் தாவினான்.


இன்னுய்யா செய்யறுன் புரியலியே ?
தள்ளு வெறி நாய்!


கீழிறங்கிய வேதாளன் கப்பலின் அடித் தளக் கிராதியைப் பற்றிக் கீழறையி-
-னுள் தாவுகிறுன் மின் வேகத்திலே.


கப்பலிலே எங்கோ ஆயுதங்கள் பதுக்கியி-
-ருப்பார்கள். தேடிப்பிடிக்க வேண்டும் அவர்கள் எடுக்கு முன்னமே!


சிறிது நேரத்தில் வேதாளனின் பரிசோதனை தடைப்படுகிறது...
37ம் அறைப் பிரயாணி-
-க்கு ஏதோ பரிசுப் பெட்டி-
-கள் தேவையாம். அனுப்ப வேண்டுமாம் இன்றிரவே
நகர்த்திவிடுவோம். அபார கனம்


பணியாட்கள் போனதும் அதிலொரு பெட்டியைத் திறக்கிறுன் வேதாளன்.
துப்பாக்கி, உடைகள்! பேஷ். அறைகளிலே எப்படி அகப்படும்?... விரைந்து செல்வோம். இன்றிரவு தான் நடத்துவார்கள்!

அன்று நள்ளிரவு கப்பலின் 37ம்
அறையில் ஒரே பரபரப்புமயம்!

டேடே. காணுமே
என் உடுப்பை!

கிடங்குலே சிக்கி
யிருக்கும். அதைத்
தேட நேரம்
இல்லை இப்போ.

கிடங்கிலேயும் ஆள் நடமாட்டம்!

ஓ! ஒரே அளவுப்படி
தயாரித்த பொய்க்
கால் செருப்புகளோ!
பலே முன்னேற்பாடு!

ஆழ்ந்த நடுநிசியில் ஆரம்பித்தது
கொள்ளை. பாலம், இஞ்சினறை...
ஒவ்வொன்றாகக் கைப்பற்றப்பட்டது..

இதென்ன, கொள்ளைத் திட்டத்தில்
கோளாறு ஏதேனும் நேருகிறதா?

ஒரு துரும்பு
கூட விடலை.
நீ?... ஆ!

என்
பாடு
குஷி
போ!

போகுமிடமெல்லாம் கள்ளர்களை
எவனோ மடக்கித் தாக்கிவருகிறான்.

அப்புறப்படுத்தி
விடறேன். பூட்டு
நீ... அட.... ஆ!


எங்கே எல்லாரும்? டேடே இதென்ன எளவு..... ஹா!
இதோடு விட்டுவிடு என்கிட்டே!


பாழாப்போக... எங்கே மத்தவங்க?
நீயும் நானும்தான் பாக்கி!


அடச்சே! விழுந்து செத்துப் போன நீயா...?
மயக்கம் போடாதே. சைகை கொடுத்து நேரா ஹெலி-காப்டரை வரவழை முதலில்!


காத்திருந்த ஹெலிகாப்டரை வரச் சொல்லி சைகை கொடுத்த உடனே அக் கடைசீ ஆந்தைவிழியான் தாக்கப்-படுகிறுன் வேதாளனின் தரங்களால்.


உதைபட்டு சுருளுமுன் மரியாதை-யாக வெளியே வந்துவிடு!

கேப்டனுக்கு அறிவிக்கிறான் வேதாளன்.

தாக்குதல் முடிந்தது, கேப்டன். இனி, கள்ளர்கள் உங்கள் கையில்!

எங்கே கிராதகர்கள். தவிடுபொடி ஆக்குகிறேன்.

எவனோ உன் வாலை அறுத்து விட்டானோ?

தனி ஆளாகவா இத்தனை பேரையும் முறியடித்தீர்கள், எப்படி?

ஏதோ முயன்றேன்.. இவனை மட்டும் என் கூட அனுப்பினால்..

...ஆரியன் கப்பலின் களவுப் பொருள்களை காண்பிக்கவைப்பேன்.




அலைகடல் ஒலிக்கும் கரையெங்கும் பேசப் பட்டுவருகிறது ஆந்தைவிழிக் கள்ளர்குலத்தை அடியோடு அழித்த வீரனின் கதை!





# வால்ட் டிஸ்னியின் காமிக்ஸ்






வால்ட் டிஸ்னி படைத்த சுவையான கதைகள் **இந்திரஜால் காமிக்ஸில்** இடம்பெறப் போகின்றன. ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன்னின் புகழ்பெற்ற கதையைத் தழுவிய **"புதையல் தீவு"** நவம்பர் இதழிலே வெளியாகும்.







அகமகிழ்ந்து படிக்கத் தக்க
அம்சங்கள் நிறைந்த
அருமையான பொக்கிஷம்
**இந்திரஜால் காமிக்ஸ்.**
**ஜாரோ, ராபின் ஹூட்,**
**ராப் ராய்,**
**விண்வெளியில் மனிதன்,**
**ஆழ்கடலுக்கு அடியிலே**
**௨0,000 லீகுகள்...**
முதலிய பரபரப்பூட்டும்
கதைகளைத் தாங்கிவரும்
இதழ்களை எதிர்பாருங்கள்.
இவ் வரிசையிலே
முதலாவதாக
**"புதையல் தீவு"**
என்ற கதை நவம்பர் மாதம்
பத்திரிகைக் கடைகளுக்கு
வந்துவிடும். முன்னதாகவே
சொல்லிவைத்துவிடுங்கள்
உங்கள் பிரதிக்கு.








# வியூ மாஸ்டரில் பாப்புவின் உலகப் பிரயாணம்





































உலகத்தில் நீங்கள் என்னென்ன பார்க்க விரும்புகிறீர்கள்? வியூ மாஸ்டரின், உயிர்த் துடிப்புடன் விளங்கும் தத்ரூபமான முழு வர்ணப் படங்கள், உலகின் புராதன அதிசயங்களிலிருந்து வால்ட் டிஸ்னியின் "விந்தை உலகம்" வரையுள்ள பற்பல காட்சிகளைச் சித்தரிக்கின்றன. இதுவரை என்றும் கண்டிராத அளவில் உயிர்க் களையுடன் விளங்கும், வியூமாஸ்டர் படங்களின் வனப்பு, ஒரு புதிய, பரவசமூட்டும் அனுபவமாகும். அவற்றை இன்றே பாருங்கள்.



SAWYERS VIEW-MASTER

தயாரிப்பாளர்கள்: சாயர்ஸ் இன்க்., போர்ட்லேண்ட்-7, ஓரிகான்

கிடைக்குமிடம்: உங்கள் அருகாமையிலுள்ள புகைப்பட வியாபாரியிடம் அல்லது,

## படேல் இந்தியா பிரைவேட் லிமிடெட்

பம்பாய் - கல்கத்தா - புது தில்லி - சென்னை